# ஆசிரியர்

இயற்கை என்னை கொண்டு போன புதிரான வழியில் நான் கண்ட புதுமைகளையும், மனிதர்கள்களையும் அவர்களோடு நான் செய்த உரையாடல்களையும் பயணம் முடித்து திரும்பி பார்க்கையில் அந்த பயண அனுபவம்,மற்றவர்களுக்கு உதவி செய்யும் என எண்ணி எழுத்துக்களுக்கு உயிர் கொடுத்திருக்கிறேன்...

என்னிடம் உயிர் பெற்ற எழுத்துக்கள் உங்களை சிந்திக்க வைக்கும் என நம்புகிறேன்...

இவன்.... விஜய் பிரசாத்.பி

இருந்தால் இறைவனுக்கு நன்றி...

மாலை நேரம் அது...மறையப்போகும் கதிரவனை முன்கூட்டியே கருமேகம் மறைத்திட காத்திருந்தாள் கணவனின் வருகைக்காக வாசலில்.நேரத்திற்கு ஏற்றவாறு மணியடிக்கும் கடிகாரம் ஆறு முறை மணியை அடித்தது.5 மணிக்கு வருகிறேன் என்று கூறிவிட்டு சென்றவனை எதிர்பார்த்து காத்திருக்கிறாள்...அவன் வருவதற்குள் முந்திக்கொண்டது மழை...

காற்றில் சன்னல்கள் ஒருபுறம் அடிக்க அதே வேகத்தில் அடித்தது அவள் இதயமும்..கடைசி சன்னல் வரை மூடிவிட்டால் இன்னும் காணவில்லை கள்வனை...காலையில் நடந்த சண்டையை மனதில் வைத்துக்கொண்டு கால தாமதம் செய்கிறாரோ என்ற கேள்வி ஒருபுறம் பிடித்துக்கொண்டது மழை என்ற கவலை மறுபுறம்... மழையில் அடிக்கடி நடக்கும் மண்சரிவு விபத்துக்கள் அவன் வரும் பாதையில்... இந்த ஒரு வருடத்தில் மட்டும் இரண்டு முறை நடந்து இருக்கிறது... இதுதான் அவள் பயப்பட காரணமும்...பத்திரமாக அவன் வந்து சேரும் அந்த நொடிக்காக க மழையில் அடிக்கடி நடக்கும் மண்சரிவு விபத்துக்கள் அவன் வரும் பாதையில்... இந்த ஒரு வருடத்தில் மட்டும் இரண்டு முறை நடந்து இருக்கிறது... இதுதான் அவள் பயப்பட காரணமும்...பத்திரமாக அவன் வந்து சேரும் அந்த நொடிக்காக காத்திருப்பவள் கவலையில் கைப்பேசி என்ற காதல் கருவியை மறந்துவிட்டாள்...அடிக்கடி அவன் தன்னை “மக்கு” என்று செல்லமாய் சொல்வது சரிதான் என சிரித்து கொண்டாள்..எப்போதும் முதலில் இருக்கும் அவன் எண்ணிற்கு அழைப்பு விடுக்கிறாள்...அதுவரை அமைதியாய் இருந்த வீட்டில் “நெஞ்சை பூ போல் கொய்தவளே” என்று சத்தம் கேட்க...வேகமாக ஓடினால் வாசலை நோக்கி…....

சாரலுக்காக பூட்டி வைத்த கதவை திறந்தவுடன் அவள் முகத்தில் அந்த சாரல் பட கண்களை மூடிவள்...வேகமாய் விழித்து தேடினாள் அவனை...காணவில்லை அவனை ஆனால் சத்தம் மட்டும் ஒலித்து கொண்டே இருக்க ஓடிச் சென்று பார்த்தான் தங்கள் அறையில்...தலையனை மேல் கைப்பேசி.. திரையில் ” ஒரு கவிதை” என்று பதிவு செய்யப்பட்ட தன் எண்ணிலிருந்து தவறிய அழைப்பை பார்த்து தவிக்கிறாள்....காலை நடந்த சண்டையில் கைப்பேசியை மறந்துவிட்டார் என்பது புரிந்தது...அவளும் கவனிக்கவில்லை காலைமுதலே..என்றுமே அவனை இந்த அளவு நினைத்து ஏங்கியதில்லை என்ற எண்ணம் தோண்ற...அவன் கைப்பேசியில் “கடவு சொல்” போடுகிறாள் தன் பெயரை.... இடியும்,மின்னலுமாய் மழை கொட்டித்திர்க்க...அவள் கண்களிலும் தேங்கி நிற்கிறது கண்ணீர் அவன் வந்ததும் கட்டியனைத்து கொட்டித்தீர்க்க...அவன் புகைப்படத்தை தேடினாள்...கிடைத்தது ஓர் அரிதான புகைப்படம்...இருவரும் கல்லூரி காலத்தில் காதலை பரிமாறிக்கொண்ட பின் நடந்த முதல் சந்திப்பில் எடுத்த புகைப்படம் அது...

கொண்டு சென்றது அந்த நினைவு அவளை சில வருடங்களுக்கு முன்....

கனவுகளுடன் கல்லூரி வாசலை திறந்த போது கண்முன்னே வந்து போனது இதுவரை கண்ட கல்லூரி திரைப்படங்கள்.அதுவரை ஆண்கள் பள்ளியில் படித்தவனுக்கு வெட்கத்தை சொல்லிக் கொடுத்தது இருபாலர் படிக்கும் கல்லூரி.வெளியூரில் இருந்து படிக்க வந்ததால் யாரும் பழக்கமில்லை அவனுக்கு.முதல்நாள் வகுப்பறையில் எந்த இருக்கையில் அமர்வதென்று குழப்பம்..

இங்கே அமரலாமா என்ற கேள்விக்கு.?

புன்னகையுடன் இடமலித்தான் ஒருவன் இறுதி இருக்கையில்.. முழுவகுப்பும் ஆங்கிலத்தில் மூழ்கிப்போனான்.கடிகார முள்ளையே பார்த்து கொண்டிருந்தான்.மணியடித்ததும் நடக்க துவங்கிவிட்டான் விடுதிக்கு.அறிவிற்கு எட்டாத கனிணி அறிவியலை எடுத்து விட்டோமோ என்ற தவிப்பில் தலைகுனிந்து நடக்க துவங்கினான்.

வேகமாக யாரோ இவனை இடித்து செல்ல நிமிர்ந்தான் தலையை அதே வினாடியில் இடித்தவளும் திருப்பினாள்.தான் இடித்தது ஆண் என்றதும் மன்னிப்பு கேட்க நினைப்பதற்குள் வெட்கம் அவளை ஆட்கொள்ள.திரும்பி அதே வேகத்தில் நடக்க துவங்கி விட்டாள்.ஆனால் அவன் கண்களோ தான் படைக்கப்பட்டது இவளை காண தான் என்று அவளையே பார்த்துக் கொண்டிருந்தன.அவள் திரும்பிய ஒரு கணத்தை அவன் கண்கள் காட்சிப்படுத்துகிறது.

தெரியாதவரை இடித்துவிட்டோம் என்ற தவிப்பு.அது ஆண் என்றதும் அவளை சூடிக்கொண்ட வெட்கம்.அவள் சூடிய ஒற்றை ரோஜா.காற்று எனும் ஓவியன் கலைத்துவிட்ட கருங்கூந்தல்.பிரம்மன் கற்றுவைத்த கலைகளை ஒன்று சேர்த்து செய்த இரு காவியம் ஒரே முகத்தில் கண்களாக.அதிலிருந்து கொஞ்சம் கருப்பு வண்ணத்தை திருடி பொட்டு வைத்து கொண்டாள் போலும் சிறியதாக.அடிக்கடி கால் வைத்தால் பூமிக்கு வலிக்கும் என்பதாலோ தெரியவில்லை.குதித்து குதித்து தான் ஓடினால் மான்போல.போர்களத்திற்கு போவது போல் ஓடியவள்.கல்லூரி பேருந்தை பிடிக்க ஓடுகிறாள் என்று தெரிந்ததும் விடுதிவரை சிரித்து கொண்டே சென்றான்.நண்பர்கள் எப்போதும் சூழ்ந்து இருக்க வீடாக மாறியது விடுதி ஓரேஇரவில்..ஒவ்வொருவரின் வாழ்க்கை கதைகளும் புரிய வைத்தது இன்னும் நாம் வாழவே துவங்க வில்லை என்பதை.விடிய விடிய கதை பேசியவர்கள்...எட்டு மணிவரை தூங்கிவிட்டு அடுத்த அறைமணிநேரத்தில் தயார் ஆகினர் மறுநாள் வகுப்பிற்கு...

அவனுக்கு வகுப்பறைக்கு செல்லும் ஆர்வத்தை விட அவள் யாரென்று அரியவே ஆர்வம் அதிகம் இருந்தது.புறப்பட்டான்..போகும் வழியெங்கும் அவளையே தேடி அலைந்தன கண்கள்.... தன்னை ஒருவன் தேடுவதை அரியாத அவள் வகுப்பறை நோக்கி செல்ல.யாரோ Hello என்று அழைக்க திரும்பிப் பார்க்கிறாள்.

அவள் கைப்பேசியில் ஒலிக்கும் உன்னை அள்ளி எடுத்து கைக்குட்டையில் மடித்து என்ற வரிகள் முடிந்ததும்.சிநேகிதனே..என்ற வார்த்தை மீண்டும் அவளை நிகழ்காலத்திற்கு கொண்டு வந்தது.....

அதுவரை அந்த புகைப்படம் கூட்டிச்சென்ற நினைவில் மூழ்கி இருந்த அவளை நிகழ்காலத்திற்கு கொண்டுவந்தது அந்த அழைப்பு.நிகழ்காலத்திற்கு வந்ததும் நினைவுகள் அவன் இன்னும் வர வில்லை என்பதையே நினைவுபடுத்தின..அந்த அழைப்பை பார்த்ததும் பதற்றம் தொற்றி கொண்டது அவளை..அழைப்பு அவன் நண்பனிடமிருந்து வந்திருந்தது.ஆயிரம் எண்ணங்கள் அந்த அழைப்பை(phone call) ஏற்பதற்குள்.குழப்பத்தோடு எடுத்தாள். அவன் குரலாக இருக்க கூடாத? என்று ஏதிர்பார்த்தவளுக்கு ஏமாற்றம் மிஞ்சியது.பேசியது அவன் நண்பன்.

நான் ராம் பேசுகிறேன் என்றதும்.இரண்டாம் அழைப்பு அந்த அழைப்பை தொந்தரவு செய்ய கோபத்தில் துண்டித்துவிட்டாள் அந்த அழைப்பை. அவன் நண்பனின் அடுத்த வார்த்தையை கேட்க அவள் செவிகள் துடிக்கின்றன இதயத்தை போன்றே.hello என்று ஆர்வமாய் கூறிய அவளுக்கு அமைதி பதிலாக கிடைத்தது.காதிலிருந்த கைப்பேசியை கையில் எடுத்து பார்க்கும் போதுதான் புரிந்தது...கோபத்தில் பலமுறை அழைப்பை துண்டிக்க திரையை அழுத்தியதில் அவன்

நண்பனின் அழைப்பும் துண்டிக்கப்பட்டதென்று.வேகமாய் அவனுக்கு அழைப்பு விடுத்தவளுக்கு கைகொடுக்கவில்லை மழைமேகம்.வானிலை காரணமாக தொடர்புகொள்ள முடியவில்லை அவனை...இரக்கமின்றி கொட்டும் மழைக்கு அவள் இமைகளும் உதவிட நினைத்து இரண்டு துளிகளை துளிர்த்து கண்ணீராய்...''என் தோள்கள் மீது சாயும் நேரம் மட்டும் தான் உன் கண்ணீரை நான் பார்க்க வேண்டும்.அதை துடைக்கவும் அறுதல் சொல்லவும் நானிருப்பேன்''.என்று அவன் சொன்னது நினைவில் வர.நிறுத்திக்கொண்டது கண்கள்.வந்துவிடுவான் என்று எளிதில் எடுத்துக்கொள்ள இடம் தரவில்லை காலையில் நடந்த சண்டையின் நியாபகம்.வாசலை பார்த்தபடி விழிகள் அவ்வப்போது கைப்பேசியில் சமிக்ஞை(*signal*)வந்துவிடாதா.?என்ற ஏதிர்பார்பில்.வீட்டில் யாரெனும் இருந்திருக்கலாம் என்று எண்ணினாள்.அவர்கள் திருமனம் தான் அவர்கள் தனியாய் வாழ்வதற்கு காரணம் என்பதை அவள் அறிவாள் ஆனாலும் ஒரு ஆதங்கம்..இவை எல்லாம் அன்று தான் பார்த்த கடைக்கண் பார்வையின் விளைவில் ஏற்பட்டவையா என்ற ஆச்சரியம்...

இரண்டாம் நாள் கல்லூரியில் நடந்து சென்றுகொண்டிருந்த அவளை *hello* என்று அழைத்தது ஒரு குரல் யாரென்று பார்க்க திருப்பியவள்.ஒரு ஆண் என்றதும் முழித்தாள்.கூப்பிட்டது தன்னை இல்லை நமக்கு முன்னே செல்பவரை என்று திருப்பி கொண்டவளுக்கு ஓர் அதிரச்சி அவள் பின்னால் நிற்பவன் கூப்பிடுவது நேற்று நாம் இடித்தவனை என்றதும் தரைக்கு செலுத்திவிட்டாள் தன் பார்வையை.*hello* என்ற குரலுக்கு திரும்பி பார்த்தான் அவனும்..கூப்பிட்டவன் நேற்று வகுப்பறையில் இடமலித்த நண்பன்,ஆனால் அவனுக்கு முன்னால் நிற்பவள்...இரண்டாம் முறை அவளை பார்த்தான் அவன்...

அவள் கொலுசின் ஓசை வழிவிடச் சொல்கிறது அனைவரையும் என்று தெரிந்தவுடன் அவனும் வழிவிட்டான் அவளுக்காக..அதுவரை தரையை பார்த்தவளின் கண்கள்.அவனை கடைக்கண்ணால் பார்த்ததை நம்பமுடியவில்லை அவனால்.கனவா ? என்று எண்ணுவதற்கு இடம் தராமல் உடனே தோள் மீது கை வைத்தான் நேற்று வகுப்பறையில் தனக்கு இடமளித்த தோழன்.நேற்று முதல்நாள் தயக்கத்தில் தங்கள் பெயரை பரிமாறிக்கொண்டதால் நினைவில்லை அவனுக்கு.

'உன் பெரு தெரியலடா அதா *hello*-ணு கூப்ட'என்றான்.

பரிமாறிக்கொண்டனர் பெயர்களோடு சேர்த்து நட்பையும்.'அன்பு' என்றான் இடமலித்தவன்.'சிவா' என்றான் இவன்.இரண்டாம் நாள் வகுப்பில் கவனம் செல்லவில்லை அவனுக்கு.பாடம் தெரிந்து கொள்வதை விட அவளை தெரிந்து கொள்வதில் ஆர்வமாய் இருந்தான்.இடைவெளியின்றி தேடினான் ஒவ்வொரு இடைவேளையின் போதும் தென்படவே இல்லை தேவதை.அவள் தன் வகுப்பில் இருப்பாளோ என்று தேடியவனுக்கு ஏமாற்றம் மிஞ்சியது.அவளை தேடி அலைந்ததில் தெரியவில்லை ஒருவாரம் ஓடியது.இயந்திர வாழ்க்கையில் அவள் நினைவு மட்டும் இனிமை தந்தது அவனுக்கு...அவனை ஆறுதலாக்கும் நேரம் ஆராய்ச்சிகூடம்(*lab*)செல்லும் வெள்ளிக்கிழமை மட்டுமே...கல்லூரியில் சேர்ந்த பின் அவன் சந்திக்கும் இரண்டாம் வெள்ளி அது...அவளை தேடுவதை மட்டும் பிடித்த அவன் கண்களுக்கு கணிப்பொறி திரையை பார்ப்பது கடினமாய் இருந்தது.வெறுப்பில் கண்களை வேறுதிசையில் செலுத்தினான்..திறந்தது கதவுகள் பக்கத்து ஆய்வுகூடத்தில்..கண்ணாடி சுவர்கள் என்பதால் இங்கிருந்து பார்க்க முடியும் அந்த அறையை.வேறு பாடப்பிரிவு மாணவர்கள் நுழைய துவங்கினர்.அவள் வர கூடாதா..? என்று நினைத்தவனின் ஆசை நிறைவேறியது..அந்த கண்ணாடி கதவை கஷ்டப்பட்டு திறந்தாள்.தன்னை இடித்தது போன்றே அவள் தோழியையும் இடித்தவள்..ஒருவழியாக அமர்ந்துவிட்டாள் அவள் இருக்கையில். விசைப்பலகையில் அவள் செயயும் விளையாட்டை ரசித்து கொண்டுடிருந்தான். கோபம் வந்தது கல்லூரி முடிந்ததை அறிவித்த மணி மீது..எல்லோரும் வீட்டிற்கு செல்ல இவன் மட்டும் அவளை பின் தொடர்ந்தான்.அவள் பெயர்?வகுப்பு? ஏதும் தெரியவில்லை அவனுக்கு.அன்று இவனை இடித்துவிட்டு வேகமாக கல்லூரி பேருந்தை பிடிக்க சென்றவள் இன்று நேரடியாக மாநகர பேருந்தை பிடிக்க சென்று கொண்டிருந்தாள்.குழப்பத்தில் மூழ்கி போனான் அவன்.அதே குழப்பத்தோடு விடுதிக்கு வந்தவனிடம் நண்பர்கள் கேள்வி கேட்க மழுப்பிவிட்டு

*நகர்ந்தான்.அந்த குழப்பதிற்கு விடை தெரிய விடுதியில் தங்கியிருக்கும் தன்னோடு முதலாம் ஆண்டு படிக்கும் நண்பர்களில் யார் வகுப்பு தான் சென்ற ஆய்வகத்தின் பக்கத்து ஆய்வகம் வந்ததென்று விசாரித்தான்.கண்டுபிடித்துவிட்டான் அவள் பாடப்பிரிவை..அவள் பெயர்?*

*அவள் பார்வையிலே தெரிந்தது மின்சாரம் பாயச்ச எலக்ட்ரான் தேவையில்லை என்று.ஆதனால் தான் எலக்ட்ரானிக்ஸ் பிரிவை எடுத்தாளோ என்று தோண்றியது..அவள் பெயர் என்ற என்று கேட்க தயக்கம் அவனுக்கு.இருந்தாலும் கேட்டுவிட்டான் அவன் நண்பனிடம்.அவனுக்கும் வகுப்பறை புதிது என்பதால் தெரியவில்லை அவள் பெயர் நண்பனுக்கு.அடுத்த நாள் விடியல் அவளை பார்ப்பதற்காகவே என்று இரவினை கழித்தான்..மறுநாள் எப்போதும் பார்ப்பதை விட கண்ணாடியை அதிமாகவே பார்த்தான் ஆனால் அவை பிரதிபலித்தவை அவள் முகத்தை.இடைவேளை நேரம் வரை காத்திருக்கும் நிமிடங்கள் நரகமாய் தோண்ற.கால்கள் தானாக ஓடியது அவள் வகுப்பறையை நோக்கி இடைவேளை மணி ஒலித்ததும்.*

*அவள் வகுப்பறை சன்னல் கம்பிகளில் இடையில் காட்சயளித்தது காதோரம் உரசிய கார்கூந்தலை அவள் வருடி மீண்டும் கூந்தலுக்குள் வழியனுப்பிய காட்சி.இடைவேளை என்றும் பாராமல் இடைவிடாது எழுதிக்கொண்டிருந்தாள் அவனுக்கு பிடிக்காத அந்த கணக்கு பாடத்தை கரும்பலகையை பார்த்து.அவன் நண்பனை தேடி அவளை காண்பித்து பெயரை கேட்டான்.நண்பனின் அடுத்த வார்த்தையில் பெயரை எதிர்பார்த்து அவளை பார்த்துக்கொண்டிருந்த அவனன காதில் ஒலித்தது அந்த கம்பீரமான பெயர்.அந்த நொடி முதல் இதயதுடிப்பின் ஒலி அவள் பெயராகவே மாறி போனது அவனுக்கு.காத்திருந்தான் அடுத்த வெள்ளிக்கிழமைக்காக ஆய்வகத்தில் அவளை பார்த்து ரசிக்க..அந்த நாளும் வந்தது அவளும் வந்திருந்தாள்.பட பட வென அசையும் அவள் உதடுகள் ஆசிரியர் வந்ததும் அமைதியாக அந்த வெகுளிதனத்திற்கும்.திரையை திரு திரு வென பார்க்கும் கண்களுக்கும் அடிமையானான் அவன்.அவளோடு பேசவேண்டும் என்பதே இவனின் அடுத்த நோக்கமாக இருந்தது.அதே எண்ணத்தோடு அன்றிறவு அதற்காக அவன் நண்பனிடம் ஆலோசிக்க அதற்கேனவே இருக்கிறது "இன்ஸ்டாகிராம்" என்றான்.அதுவரை அதைபற்றி அரியாதவன் நுழைந்ததும் தேடினான் அவள் பெயரை..முழு பெயரையும் தேடினான் கிடைக்கவில்லை..இரண்டே எழுத்தில் அவளை எல்லோரும் அழைப்பார்கள் என்று தோண்றியது..தேடினான் கிடைத்தாள்..*

*தோற்றிக்கொண்டது இதய துடிப்பு.தைரியத்தை வர வைத்து அனுப்ப தயாரானான் Hi....என்ற குறுஞ்செய்தியை தட்டச்சு செய்து அழித்து மீண்டும் தட்டச்சு செய்து அனுப்பவும் மனமின்றி அழிக்கவும் மனமின்றி தடுமாறி தவித்தான்..அவள் நினைவுகளில் சிக்கிகொள்ள குழப்பத்தில் அனுப்பிவிட்டான் குறுஞ்செய்தியை..அனுப்பிய நொடிமுதல் எடுக்கவில்லை கண்களை கைப்பேசியில் இருந்து.காத்திருந்தான் அவள் குறுஞ்செய்திக்காக அப்போது தான் புரிந்தது கடித்தின் கஷ்டம்.ஒருவழியாக பார்த்துவிட்டாள் பற்றிக்கொண்டது தீ அவனுக்கு..கண்கள் கைப்பேசி திரையை இடைவிடாது பார்க்க துடித்தது திரை typing...*

*யார்? என்று தெரியாமல் எப்படி பதிலுக்கு குறுஞ்செய்தி அனுப்புவாள் என்று எண்ணியவனின் எண்ணத்தை மெய்யாக்கியது அவள் மௌனம்..அடுத்த நொடியில் மறைந்தது அந்த typing..தொெந்தரவு செய்ய விருப்பமில்லை அவனுக்கு அதனால் மேலும் குறுஞ்செய்தி அனுப்பவில்லை.அவள் நினைவுகள் இவனை சிறை வைத்தன.நாட்கள் அவளை வெள்ளிக்கிழமைகளில் பார்ப்பதிலும்,இடைவேளைகளில் இடைவிடாமல் பார்ப்பதிலும் ஓடின.ஒவ்வொரு முறையும் அவன் கண்கள் படைக்கபட்டதிற்கு அர்த்தம் தேடிக்கொண்டன அவளை பார்க்கும் பொழுதெல்லாம்.மழைகாலம் துவங்கும் மாதம் அது.தான் வரப்போவதை முன்கூட்டியே அறிவிக்கும் வண்ணமாக வானவில்லை வரைந்திருந்தான் வருண பகவான்.அன்று வகுப்பு முடிந்து வானவில்லை அவன் ரசித்து கொண்டிருக்க அவனை கடந்து சென்றது மின்னலாக அவள் பார்வை. அது அவள் தானா..பார்த்தது தன்னை தானா என்று எழுந்த கேள்விகளுக்கு விடை காத்திருந்தது அன்றயை இரவில்..அவள் பார்வையில் பாதி நனைந்தவன் மீதி நனைந்தான் மாலை நேர*

*மழையில்..ஒரு கோப்பை தேநீரும் ஒரளவு சத்தத்தில் அவன் காதோரம் கேட்கும் இளையராஜாவின் "இதயமே"பாடலும் அதில் வரும் வரிகளோடு தன் வாழ்வையும் ஒப்பட்டு இதமாய் இதயத்தில் ஏதோ ஓர் உணர்வு.அருகில் அவள் இல்லை என்ற ஏக்கம்..மழையின் கடைசி துளி இவன் கண்ணீராக காரணம் யார் இளையராஜாவா? 'இதயமே'வா? இதயம் முழுதும் நிரம்பிய அவளா? சொல்ல தெரியவில்லை அந்த கண்ணீருக்கு.நட்பிற்கு பஞ்சமே இல்லை அவன் விடுதி வாழ்க்கையில் எல்லாம் மறைந்து போனது அவன் நண்பர்கள் செய்யும் வேடிக்கைகளில்,நகைச்சுவையில்,அளவில்லா அன்பில்..இவையெல்லாம் இவனை இயல்பு வாழ்க்கைக்கு திருப்ப இருளை சூடிக்கொண்டது வானம்..அந்த நொடி வந்த அழைப்பு சிந்திக்க வைத்தது அவனை..தன் குடும்பத்தில் அவளை ஒருத்தியாக்க நினைத்தவன் அவள் நினைவாலே மறந்துவிட்டான் தன் குடும்பத்தை..தன் அன்னையிடம் வந்த அழைப்பை பார்த்தவுடன் தோன்றியது அவனுக்கு ஒரு வாரமாய் வீட்டிற்கு அழைப்பு விடுக்காதது..*

*'சிவா' எப்டி பா இருக்க?' என்ற தன் தாயின் முதல் குரலில் ஒடுங்கியது நெஞ்சம்."படிக்குற புள்ளய தொந்தரவு பண்ணாதனு அப்பா சொன்னாரு நான் தான் புள்ள குரல கேட்டு ரொம்ப நாள் ஆச்சுனு நம்ம இலக்கியாவ phone பண்ண சொன்ன"*

*என்ற தாய் பரிவான வார்த்தைகளுக்கு மெதுவான குரலில் பதில் சொல்லி துண்டித்தான் அழைப்பை.எப்போதும் பேசும் தங்கை இலக்கியா விடம் கூட பேசவிடாமல் அன்னையில் அந்த இறுதி வார்த்தை முடக்கியது அவன் பேச்சை.."படிப்ப பார்த்துட்டு உடம்ப பாத்துக்காம விட்ராத உன்னவிட அந்த Mark ஒன்னும் ஒசத்தி இல்ல"*

*தான் வந்த நோக்கம் அரியாமல் செய்து கொண்டிருக்கும் செயல்களை நினைத்து பார்த்தான்.நிரம்பியது கண்கள்...*

*இதுவரை யாரும் தொடாத அவன் இதயத்தை அவள் தொட்டதன் மர்மம் என்னவென்று அவன் மனதில் பல கேள்விகள் எழ..அடுத்தமுறை இயற்கை அவளை சந்திக்க வைத்தால் அதை பற்றி சிந்திப்போம் அதுவரை தன் வாழ்வின் கடமைகளை நோக்கி ஓடுவோம் என்று அவனை முடிவெடுக்க வைத்தது அவன் அன்னையிடம் இருந்து வந்த அந்த அழைப்பு..அந்த இரவு முடிவதற்குள் தன் வாழ்வின் திருப்புமுனையை சந்திக்க போகிறோம் என்று அரியாதவன் மூழ்கி இருந்தான் ஆழ்ந்த சிந்தனையில். அவளை ஏன் தனக்கு பிடித்தனெ மூளையிடம் கேட்டான் ஒருவேளை அழகோ? என்று பதிலத்தது.இதயத்திடம் கேட்டான் விவரிக்க முடியாமல் திணறி வேகமாக துடிக்க ஆரம்பித்தது.அவள் நினைவில் இருந்து விடுபட நினைத்தவன் கைப்பேசியை கையில் எடுத்தான் காத்திருந்தது அந்த திருப்புமுனை.அது என்றோ இவன் அனுப்பிய குறுஞ்செய்திக்கு அவள் அனுப்பிய பதில்"Hi...."தரையில் பட மறுத்தன கால்கள்,திரையை பார்த்து கொண்டிருந்த கண்களும் இமைக்க மறந்தன.என்ன பேசுவது என்று ஆயிரம் எண்ணங்களை கற்பனை செய்து வைத்தவனுக்கு அந்த நொடி ஒன்றுமே தோண்றவில்லை...type செய்தான் அழித்தான் மீண்டும் type செய்தான் அழித்தான். Do u know me என்ற அவனின் கேள்விக்கு Mmm...என்ற பதில் வந்திருந்தது.இவனின் அடுத்த கேள்வி epdi...?அதற்கு அவள் அளித்த பதில் இவனுக்கு அவளுடன் பேச காரணங்களை தந்தது.அன்று எதோ அவசரத்தில் ஓடும்போது தெரியாமல் இடித்ததாக சொன்னாள். அவளுக்கு தன்னை நன்றாக தெரிந்திருக்கிறது என்று அவனுள் ஒரு அளவில்லா மகிழ்ச்சி.அவளை பற்றி ஓரளவு தெரிந்திருந்தாலும் ஒருசில வழக்கமான கேள்விகளை கேட்டான்..which department.? அவள் பதில்கள் அனைத்தும் அவனை ஆச்சிரியப்படுத்த துவங்கின."உங்க பக்கத்து lab-கு வர department என்றாள்"..ஒருவரை ஒருவர் அறிமுகம் செய்து கொண்டனர்.அன்றைய இரவு முடிவதற்குள் அந்த கேள்வியை கேட்டுவிட வேண்டும் என துடித்தான். எங்கே அதற்குள் சென்று விடுவாளோ என்ற பயத்தில்.Oru vishyam kekkalaama..?என்றான்.அதற்கு அவள் naa onnu sollalaama..?என்றாள்.இவன் அது என்னவாக இருக்கும் என்று குழப்பத்துடன் sollalaam என்றான்..அவளிடமிருந்து வந்த பதில்: Onnu அதுவரை அவள் வெட்கத்தில் மட்டுமே மூழ்கிகிடந்தவன்.அவள் வெகுளிதனத்திலும் மூழ்கிபோனான்."நான் இப்டி*

*தான் அப்பப்ப விளையாடுவேன்" என்று அடுத்த குறுஞ்செய்தியை அனுப்பிவிட்டு Neenga ippo Antha Oru vishyatha kekkalaam..என்றாள். முதல் நாள் வேகமாக கல்லூரி பேருந்தை பிடிக்க ஓடியவள் ஏன் அடுத்த நாளில் இருந்து மாநகர பேருந்தில் செல்கிறாள் என்பதே அவனின் கேள்வியாக இருந்தது.அதற்கு அவள்..Typing…*

*பதில் வந்தது அந்த கேள்விக்கு அவளிடமிருந்து.அதை கேட்டதும் அவள் இவ்வளவு வெகுளியானவளா? என்று தோண்றியது.அவன் எப்போது அதை நினைத்தாலும் புன்னகை பூத்திடும் .முதல் நாள் வகுப்பில் உங்களுக்கு ஏதேனும் சந்தேகங்கள்,பிரச்சனைகள் இருந்தால் என்னை தனியாக சந்தித்து கூறுங்கள் என்று சொல்லிய அவள் வகுப்பின் கணித பேரிசிரியையை அதிகம் பிடித்தது அவளுக்கு.அன்று வகுப்பில் அந்த பேராசிரியை கொடுத்த வீட்டுப்பாடத்தை அவள் வகுப்பிலே முடித்திருந்தாள் அதை கல்லூரி முடிந்து கல்லூரி பேருந்தில் வீடு செல்லும் அந்த பேராசிரியையிடம் காட்டி பாராட்டை பெறவே வேகமாக அன்று இவனை இடித்துவிட்டு ஓடினாள்.ஆனால் அவளால் அந்த பேராசிரியை கண்டுபிடிக்க முடியவில்லை என்று வருத்தமாக பதிலளித்தாள்.அவனுக்கு அது குழந்தைகள் சிறுவயதில் பள்ளியில் ஆசிரியரிடம் v.good வாங்க அசைப்பட்டு வெறும் Good கிடைத்ததற்காக அம்மாவிடம் சொல்லி வருத்தபடுவது போல் இருந்தது.அவள் மாநகர பேருந்தில் இரயல்நிலையம் வரை சென்று அங்கிருந்து 20 நிமிடங்கள் இரயிலில் பயணம் செய்து கல்லூரிக்கு வந்து போவதாக சொன்னாள்.அவளை பற்றி ஒவ்வொரு புதிய விஷயங்களை அறியும் போதும் அவை அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.ஒருபக்கம் வெகுளியான பெண்ணாக இருக்கிறாள்.இன்னொரு பக்கம் தினமும் 20நிமிடம் இரயிலிலும் 20 நிமிடம் மாநகர பேருந்திலும் பயணம் செய்தும் கல்லூரிக்கு யார் துணையும் இன்றி வந்து போகும் தைரியமான பெண்ணாகவும் இருக்கிறாள்.இருவரும் ஒருவரை ஒருவர் குறுஞ்செய்தி வாயிலாகவே அறிந்து கொள்ள துவங்கினர். கல்லூரி முடிந்ததும் கைப்பேசியையே பார்த்துக்கொண்டு இருப்பான் அவ்வப்போது படிக்கவும் செய்தான் அவன் அன்னைக்காக.நாளை வெள்ளிக்கிழமை இதுவரை யாரென்று தெரியாமல் அவளை ஆய்வகங்களில்(lab) ரசித்து கொண்டிருந்தவன்.நாளை அவளை எவ்வாறு பார்ப்பேன் என்று சிந்தித்திருந்தான்.அப்போது gud eve என்று அவன் அனுப்பிய குறுஞ்செய்தி அவள் பதிலனுப்ப பேசத்துவங்கினார்கள்.இரண்டாம் நாளான அன்று பரிமாற துவங்கினர் அவர்கள் தங்களின் பிடித்தவை பிடிக்காதவற்றை பற்றி.அவள் விஜய் யின் ரசிகை என்றும் தனக்கு விஜயை ரொம்ப பிடிக்கும் என்றாள்.தன் பெயர் விஜய் யாக இருக்க கூடாதா என்று ஏங்கினான்.Non-veg விட vegதான் அதிகம் பிடிக்கும்.தயிர் சாதமும் உருளை கிழங்கு பொறியலும் மிகவும் பிடித்த உணவு.நடனம் ஆடுவது பிடிக்கும்.ஜானகியின் குரலில் பாடல்கள் பிடிக்கும்.தன் பெற்றோரை அளவின்றி பிடிக்கும்.நண்பர்களை அடுத்தபடியாக என்றவள்.இறுதியாக கவிதைகள் பிடிக்கும் என்றாள்.உறவினர்களை பிடிக்காது என்றாள்.உனக்கு என்ற அவளின் கேள்விக்கு அவளைபோல பதில் சொல்ல தெரியவில்லை அவனுக்கு.....*

*தனக்கு பிடித்தவற்றை அவன் சொல்வதற்குள்.நான் சொல்லியவை எல்லாவற்றையும் விட தன் அடுத்த அன்னையான அவள் அக்காவையும் அக்காவின் குழந்தையையும் பிடிக்கும் என்றவள்.இப்போது உன்னை பற்றி சொல் என்றதும்.தனக்கு பிடித்தது அம்மா,தங்கை குடும்பம் என்றவன் சிறிது யோசித்து இளையராஜா இசை பிடிக்கும் என்றான்.வேறு ஏதும் தன்னை பற்றி சொல்லி அவள் பேசுவதை தடுக்க இடம் தரவில்லை மனம்.அவள் பேசிக்கொண்டே இருக்க வேண்டும் இந்த இரவு முடியாமல் நீள வேண்டும் என்பதே அவன் எண்ணமாக இருந்தது. அவன் மனது அவளை காதலியாகவே நினைத்துக் கொண்டிருக்க அவள் தன்னை எவ்வாறு நினைப்பாள் என்ற கேள்விக்கு விடைதெரியாமல் தடுமாறியது அவன் மனம்.குழந்தைதனமான பேச்சுகளும் முதிர்ந்த கவனமான வார்த்தைகளும் அவள் மேல் காதலை அதிகப்படுத்தின.தன் அக்காவின் குழந்தைக்கு நிலவை காட்டி உணவூட்ட செல்கிறேன் என்றாள் பைத்தியக்காரிஅந்த குழந்தைக்கு உணவூட்டுவதே நிலவுதான் என்று அவனுக்கு மட்டும் தான் தெரிந்திருந்தது.விடிந்தது அன்று வெள்ளிக்கிழமை. அவளை நேரில் அறிமுகமான ஆணாக சந்திக்க போகிறான்.அவளுக்கு பிடிக்கும்*

என்ற ஊதா வண்ண சட்டை அணிந்தவன் வகுப்பறையில் கனவுகளோடு காத்திருந்தான் ஆய்வகம் செல்லும் அந்த பாடவேளைக்காக.அந்த நேரமும் வந்தது.சிவப்பு நிற சுடிதார் சூடிக்கொண்டிருந்தது அவளை.மச்சம் மையம் கொண்டிருந்தது நெற்றியில் கருப்பு பொட்டாக.காலையில் சூடிய அந்த சிகப்பு ரோஜா இன்னும் சிரித்து கொண்டே இருக்கிறது அவள் கூந்தலில்.தான் யார் என்பதை மறந்து ரசித்தான் அவளை.ஒரே ஒரு பார்வை வீசிவிட மாட்டளா என்று ஏங்கியவனுக்கு ஏமாற்றம் தந்தாள்.அன்றயை வகுப்பு முடிந்ததும் அவளிடம் நேரில் பேசிட நினைத்தவன் பின் தொடர்ந்தான் அவளை.அவளை எவ்வாறு அழைப்பதேன்று தெரியவில்லை.முழுபெயரில் அழைப்பதா இல்லை வெறும் இரண்டெழுத்து கவிதையான அவள் நண்பர்கள் அழைப்பது போல் அழைப்பதா.?இதை யோசிப்பதற்குள் அவள் வெளியே சென்று பேருந்தை ஏறிவிட்டாள்.அன்றிரவு அவள் குறுஞ்செய்திக்காக காத்திருந்தான்.Nice shirt என்ற குறுஞ்செய்தி வந்திருந்தது அவளிடமிருந்து.தன்னை ஒரு பார்வை கூட பார்க்காதவள் எப்படி சொல்கிறாள் என்று.பெண்களின் கண்கள் நொடிக்கு நூறு பார்வை பார்க்கும் என்று அவனுக்கு அப்போது தான் புரிந்தது.அவளிடம் விதவிதமான கேள்விகள் கேட்டு அவளை புறிந்து கொள்ள நினைத்தான்.அதில் முதலாவது கேள்வி அவளின் ஆசைகள்.அவளுக்கு பாரம்பரிய நடனம்(classical dance) கற்க ஆசை.முகஓவிய கலையை கற்க ஆசை(face Art).சுதந்திரமான பெண்ணாக வாழ ஆசை என்றாள்.உனக்கு என்று வந்த அவளின் அடுத்த கேள்விக்கு தன் குடும்பத்தை நன்றாய் பார்த்துக்கொள்ள மட்டும் ஆசை என்றான் ஆனால்...

அவள் ஆசைகளை கேட்டவுடன் அவற்றை நிறைவேற்றுவதை தன் ஆசையாக்கினான் அவன்.நாட்கள் செல்ல செல்ல அவர்களது நெருக்கமமும் அதிகமானது.இன்ஸ்டகிராமில் தொடங்கி WhatsApp வந்திருந்தது நட்பு.முதன் முதலாய் அவள் தெரியாமல் இடித்து சென்றதும்,அவள் பார்த்த கடைக்கண் பார்வையும்,ஒவ்வொரு வெள்ளிக்கிழமை ஆய்வக பாடவேளையில் அவளை ரசிக்கும் நினைவுகளுடனும் நாட்கள் ஓடின.ஆயிரம் ஒத்திகைகள் பார்த்திருப்பான் எப்படியாவது அவளை நேரில் பார்க்கும் வெள்ளிக்கிழமைகளில் தன் காதலை சொல்லிவிட,ஆனால் அவளை நெருங்கும் போது நெஞ்சம் துடிக்கும் சத்தம் வேண்டாமென்று தடுத்துவிடும் அதுபோலதான் அன்றும் காதலை சொல்லாமல் விடுதி வந்து சேர்ந்தான்.வழக்கம் போல் குறுஞ்செய்திக்காக காத்திருந்தான்.அடுத்த இரண்டு நாட்கள் விடுமுறை என்பதால் அவளின் பேச்சில் சிறைப்பட்டு கிடக்க தயாராக இருந்தான்.அந்த இரண்டு நாட்களில் அவள் கூறப்போகும் விஷயங்களால் அவன் காதல் மறைக்கப்பட போகிறதென்று அப்போது தெரியவில்லை அவனுக்கு.எப்போதும் மாலை விட்டிற்கு இரயிலில் செல்லும் போது அவள் அனுப்பும் குறுஞ்செய்தி வரவில்லை அன்று.Saptiya..?என்ற குறுஞ்செய்தி கைப்பேசி திரையில் வர விரைந்தான் பதிலனுப்ப.அவளின் இந்த கேள்விக்கு உண்மையான பதிலனுப்பவே உணவருந்த செல்வான்.அடிக்கடி அறிவுரைகளும் சொல்வாள் தன் தாயை போன்றே.ஒருவரை ஒருவர் அக்கறையாக பார்த்துக் கொள்ள ஆரம்பித்தனர்.அவள் நேரம் கடந்து உணவு உண்பது பிடிக்காது அவனுக்கு.அவனை கோபப்படுத்தி பார்க்கவே தாமதமாக உண்பாள்.உணவில் ஆரம்பித்த உரையாடல் நிண்டு கொண்டே இருக்க அவளை கோபப்படுத்தி பார்க்க ஆசை வந்தது இவனுக்கு.அவளுக்கு பிடித்த விஜய் யை திட்டினால் அவளுக்கு கோபம் வரும் என்று அறிந்தும் பேசினான்.கோபத்தில் சிவக்கும் அவள் முகமும்,வேகமாய் தன்னை திட்டும் உதடுகளும்,பட பட வென பேசும் கண்களும் கற்பனையாக வந்து போனது அவனுக்கு. அவன்:Intha Vijay nu oru Actor erukkarula unakku theriyuma.?. அவள்:Yen unakku theriyaatha?(கோபமுடன்) அவன்:SA Chandra Sekar nu oruthar illa na Vijay lam Onnume illa.என்றான். அவள்: Oh Apdiya? அவன்: Ama அவள்:Enimay yen kitta pesatha Plz.

இந்த குறுஞ்செய்தியை பார்த்ததும் விளையாட்டை நிறுத்திக்கொண்டவன். மன்னிப்பு கேட்க துவங்கினான்..Chorry இப்படிதான் மன்னிப்பு கேட்டுக்கொள்வார்கள் இருவரும் அவள் குழந்தைதனத்தில் இதுவும் ஒன்று.பதில் ஏதும் வரவில்லை.Online இந்த வார்த்தை அவள் பெயர் அருகே கண்பிக்காதா? என்று ஏங்கினான்.அவ்வளவு கோபமா? அவளுக்கு.கல்நெஞ்சக்காரி அவன் ஏங்குவான் என்றும் தெரிந்தும் தண்டனை கொடுத்து சென்றுவிட்டாள்.அது அவர்களின் முதல்

*பிரிவானது...*

*அதுவரை எத்தனையோ நாட்கள் தனிமையை ரசித்தவனுக்கு அவள் தந்த தனிமை அவளை பற்றி இடைவிடாது நியாபகங்களை தந்தது.நம்மை பற்றி ஒரு நொடியாவது சிந்திப்பாளா..?என்ற கேள்விக்கு பதில் கிடைக்கவே இல்லை அவனுக்கு.அவள் நினைவுகளிலே கழிந்தது அந்த இரவு.விடிந்ததும் கண்கள் கைப்பேசியில் அவள் பெயரை தேடியது. அவன் மன்னிப்பை ஏற்றதாக பதில் குறுஞ்செய்தி வரவில்லை.தேக்கி வைத்த காதல் கத்தியாக மாற கிழித்திருந்தது இதயத்தை.நேரடியாக Call செய்ய முடிவெடுத்தான்.Call ஐ வேறு யாரெனும் எடுத்தால் என்ன செய்வது என்பது போன்ற ஆயிரம் கேள்விகளுக்கு பதிலை தயார் செய்தான்.Ring ஐ விட வேகமாக அடித்தது அவன் இதயம்.அந்த பக்கத்தில் இருந்து ஒலித்த குரல் இவன் மூச்சுச் திணற வைத்தது.குயிலின் குரலுக்கும் குழந்தையின் குரலுக்கும் இடையில் ஏதோ ஒரு ராகத்தில் அமைந்த எட்டாவது சுவரம் அந்த குரல்.அவள் குரல்.Hello இவனின் இந்த வார்த்தையை கேட்டதும் அவளிடமிருந்து வந்த கேள்விக்கு பதிலே இல்லை அவன் தாயர் செய்து வைத்த ஆயிரம் பதில்களில்.யாரு பேசுறது..? என்ற கேள்வியது.துண்டித்துவிட்டான் அழைப்பை.துடிக்கும் இதயம் அமைதியாவதற்குள் வந்தது அழைப்பு அவளிடமிருந்து...*

*இரும்பு Gate ஐ யாரே திறக்க எட்டிப்பார்த்தாள் இரண்டு மணி நேரமாக அவனுக்காக காத்திருந்தவள்.அவன் வந்து விட்டான். ஓடிச்சென்று அவனை கட்டியணைக்க கைகள் துடிக்க அவன் கண்களில் தெரியப்போகும் காதலை அவன் முகத்தில் இதழ் பதித்து ஏற்றுக் கொள்ள தயாரானாள்.*

*வேகமாக விட்டிற்குள் வந்தவன் Emergencyகு Call பன்னா எடுக்க மாட்டியா?என்று கோபத்தில் கத்தினான்.பேசாம வீட்டுக்கே வராம எங்கயாசும் போயிரலாம்னு இருக்கு என்ற வார்த்தைகளே கூறியவாரே அறைக்குள் நுழைந்தான்.*

*தன் கணவனின் நண்பன் பேசிக் கொண்டிருக்கையில் வந்த இரண்டாம் அழைப்பு அவனுடையது என்று அப்போதுதான் புரிந்தது அவளுக்கு.விழி தாண்டாமல் பார்த்துக் கொண்டாள் கண்ணீரை.அவனிடம் காலை போட்ட சண்டைக்காக மன்னிப்பு கேட்க காத்திருந்தவளின் மனம் உடைந்து போனது அவனின் வார்த்தைகளால்.அமைதியாக சென்று விட்டாள் தனி அறைக்கு.அவன் மழையில் சிக்கிக் கொள்ளாமல் வீடு வர வேண்டிக்கிடந்தவளின் காதலை புரிந்து கொள்ளாமல் கோபப்பட்டுவிட்டான்.இருவரும் தனி தனி அறையில் இருக்க அமைதி கைப்பற்றியது அவர்கள் வீட்டை..கோபத்தில் அவளோடு பேச வருப்பமில்லை அவனுக்கு.தன் காதலை புரிந்து கொள்ளாமல் கோபப்பட்வனிடம் பேச மனமில்லை அவளுக்கு.அவள் ஒருவார்த்தை பேச மாட்டாளா என்று ஏங்கியவன் இன்று அவளை ஏங்க வைத்துவிட்டான்.அவளும் அவன் காதல் நினைவுகளில் மூழ்கிகிடக்கிறாள்.*

*முதல் பிரிவின் போது அவளிடமிருந்து வந்த Call ஐ எடுத்தது காதில் வைத்தான் அவன்....*

*மனதில் ஆயிரம் குழப்பங்களுடன் பேசப்போகும் வார்த்தைகளை கவனிக்க காதுகள் பாம்புகளிடமிருந்து கடன் வாங்கி வைத்திருந்தான்.Hello இந்த number கு Call வந்துசு யாரு நீங்க..? என்ற குரல் அவளுடையது தான்.வேறு யாரும் பேசவில்லை என்று ஆனந்தம் கொள்வதா? தன்னை யாரென்று தெரியாதது போல் பேசுவதற்கு வருத்தம் கொள்வதா? என்று தெரியவில்லை.மனதில் தைரியத்தை வர வைத்துக்கொண்டு நான் Shiva பேசுறன் என்றான்.உடனே அங்கிருந்து அவனுக்கு கேட்க கூடாதென்று சிரிப்பை அடக்கும் சினுங்கல் சத்தம் கேட்டது. அவள்: நான் கோவமா இருக்க.. அவன்: Sorry கேட்க தான் call பன்ன.. அவள்: உங்க Sorry லாம் இங்க யாருக்கும் தேவையில்ல.. அவன்: கோவபடாத 100 times sorry.. அவள்:100 sorry னு ஒரே ஒரு sorry சொல்ற..100 times sorry சொல்லு.. அவள் குழந்தைதனத்தை என்ன சொல்வதென்று தெரியவில்லை அவனுக்கு.. ஒவ்வொரு sorry யையும் எண்ணிக் கொண்டிருந்தாள்.. அவன்: sorry sorry sorryyy அவள்: 78 79 80*

*100 எண்ணி முடித்ததும் அவள் சிரித்த சிரிப்பை மீண்டும் கேட்க எத்தனை நூறாயிரம் முறை*

*மன்னிப்பு கேட்கலாம் என்று தோண்றியது. ஒரு வழியாக அவளை சமாதானப்படுத்திவிட்டு இயல்பாய் பேச துவங்கினர்.அவன் காதல் மறைக்கப்பட போவதுற்கு அந்த பேச்சு அடித்தளம் என்று அரியவில்லை அவன்.வீட்டு வேகைளை செய்து விட்டு கலைப்பில் தனியறைக்கு வந்த நேரத்தில் தான் சரியாக Call வந்தது என்றாள்.*

*அவன்:ஆமா ஏன் online வரல..கோவத்துலயா..? அவள்: (மௌனமாக இருந்தாள்).. அவன்: இருக்கியா...? அவள்: இருக்கன்... அவள்:அது வீட்ல முக்கியமான விஷயம் பேசுனாங்க அதான்.. அவன்: என்ன விஷயம்னு தெரிஞ்சுக்கலாமா..? அவள்: அதுவா.(யோசித்து) என் engagement பத்தி..*

*தன் காதில் ஒலித்தது சரிதானா..? என்று சரி பார்க்க மீண்டும் கேட்டவனுக்கு அதே பதில் கிடைத்தது. யாரும் தொடமுடியா ஆழத்தில் தன் காதலை புதைக்க மனதிற்குள் பள்ளம் பறித்து கொண்டான்.*

*அவன்: சொல்லவே இல்ல..என்ன தீடீர்னு..? அவள்:அதுவா..அப்றம் சொல்ற.. சிரித்துக்கொண்டாள் அவன்:ஏன் சிரிக்குற.. அவள்: ஒன்னும் இல்ல.. அவன்: மனதை கல்லாக்கி கொண்டு என்ன Date..? அவள்: January 27 கண்டிப்பா வரனும்..இப்போ அம்மா கூப்பிட்றாங்க Bye..Good Night என்றாள்.*

*கேட்பதற்கு... ஏன் இவ்ளோ சிக்கிரம் திருமனம்..யார் பையன்..? போன்ற ஆயிரம் கேள்விகள் இருந்தும் கேட்க தவறினான். ஏதோ ஓர் சொல்ல முடியா சோகம் கைப்பேசியை தூரம் வீசியவனுக்கு இருட்டியது கூட தெரியவில்லை.உணவுகள் வேண்டாமென்றவன் வராத போதும் உறக்கத்தை தேடிக்கொண்டிருந்தான்...*

*Jan 27 தேதி வந்தது..அவள் வீட்டை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தன அவன் கால்கள்...*

*கால்கள் அவள் வீட்டை நோக்கி முன்னேற...மனம் அவள் மேல் தான் காதல் கொண்ட தருனத்தை எணணிப்பார்த்துக் கொண்டே நகராமல் அவள் நினைவுகளிலே நின்றன...அவள் வீட்டிற்கு முதன் முதலாய் அவளை காண செல்கிறான்..அவள் நிச்சயதார்தம் அன்று...முகத்தில் புன்னகை... மனமெல்லாம் ரனம்...மேடையில் அவள்...யாருக்கும் கிடைத்திராத அறிய தருணம் அது...அவளை சுமந்து நின்றதால் அவன் கண்களுக்கு அரியனையாகவே தெரிந்தது நிச்சயதார்த்த மேடை..அவனை மேடையில் இருந்து வரவேற்றாள்...அழகிய பொருத்தம் தான் அவர்களுக்கு...மேடைக்கு போக மனமில்லை...நடுங்கின கால்கள்...பார்வையால் வாழ்த்துச் சொல்லி வந்துவிட்டான்....வழியெல்லாம் அவள் நினைவுகள் வழியனுப்பி வைத்தன அவனை...விடுதி வந்து சேர்ந்ததும் வாழ்வதில் அர்த்தம் என்னவென்று தோண்றின...மாலை வந்தது...அவளிடமிருந்து அழைப்பும் வந்தது உண்ணாமல் சென்றுவிட்ட காரணம் கேட்க..உதிரதத் துளிகள் உறைந்து போய் நின்றன...அதுவரை அவளிடம் பொய் பேசாதவனை அந்த கேள்வி பொய் பேச வைத்தது...இருபது நிமிடத்தில் அழைப்பை அவள் துண்டிக்க....அன்று அவன் எடுத்த முடிவு அவளோடு இருந்த நட்பை துண்டிக்க செய்யும் என்று அவன் நன்கு அறிந்திருந்தான்...இயந்திர வாழ்க்கை அவள் உரையாடல் இன்றி சுழல துவங்கியது..வெள்ளிக்கிழமைகளில் அவளை பார்ப்பதை நிறுத்திக் கொண்டான்..ஏன் என்னோடு சரியாக பேசுவதில்லை என்ற கேள்விக்கு...தான் இதே கல்லூரியில் வேறு பெண்ணை காதலிப்பதாகவும் அவளோடு பேச முயறச்சி செய்ததாகவும் அந்த வேலையில் அவளை மறந்துவிட்டதாகவும் நாளை மாலை 5 மணிக்கு அவளிடம் தன் காதலை சொல்லப்போவதாகவும் சொன்னான்..கோபப்படுவாள் என நினைத்தான்...மகிழ்ச்சியோடு..யோசனைகள் சொன்னாள்...கவிதைகள் மூலம் காதலை சொல்ல சொன்னாள்...ஒருவேளை அவள் கோபப் பட்டிருந்தால் அவனுக்கு இரண்டாம் திட்டத்தை பயன்படுத்த அவசியம் வந்திருக்காது...தான் காதலித்தவளே தனக்கு இன்னொரு பெண்ணிடம் காதலை கூற உதவி செய்வதெல்லாம் அதிர்ஷம் பெற்றவனுக்கு மட்டுமே கிடைக்கும் பாக்கியம்...அவன் மனதில் ஓடியதெல்லாம் இரண்டே விஷயங்கள் தான்...அடுத்த திட்டத்தை எப்படி நிறைவேற்றுவது..அது நிறைவேறியவுடன்..தன் அன்னைக்காக படித்து அவர்களின் ஆசைப்படி ஒரு*

வேலையோடு ஊர் போய் சேர்வதும் கடைசிவரை அவர்களை காப்பாற்றுவதும்...ஆனாலும் அவள் நினைவுகள் தன்னை என்ன செய்யுமோ என்ற குழப்பத்துடன்... மறுநாள் அவளிடம் தன் பொய்யான காதலியை பற்றியும் அவளிடம் தன் பேசிய தருணங்களை பற்றி அவள் கேட்டால் தடையின்றி பொய் சொல்ல கதைகளை தாயார் செய்து கொண்டிருந்தான்... மறுநாள் வந்தது... இருவரும் பேச துவங்கினர்...

அவன் தயார் செய்த கதைகள் எல்லாம் காற்றில் பறந்தன..அவள் அந்த பெண்னை பற்றியும் அவன் காதலை சொல்லப்போவதாக சொன்ன பொய்யை பற்றியும் ஒரு வார்த்தை கூட பேசவில்லை..இவனுக்கும் அதைப்பற்றி பேசி மேலும் அவளிடம் பொய்கள் பேச விருப்பமில்லை...அவளது வாழ்க்கையில் இன்னும் தான் இருப்பது சரியாக படவில்லை அவனுக்கு...அடுத்த திட்டத்தை நிறைவேற்ற காலம் பார்த்துக் கொண்டிருந்தான்...அடிக்கடி பேசுவதை குறைத்துக் கொள்ள..தன் உயிர் பிரிவதை தானே பார்த்துக் கொண்டிருந்தான்...ஒரு நாள் பேசாத அவன் மறுநாள் பேசுகையில் அந்த திட்டம் பளித்தது அன்று...விளையாட்டாக ஆரம்பிக்கும் போது தெரியவில்லை போக போக இது தான் சரியான நேரமும் சூழ்நிலையும் என புரிந்து கொண்டான்...அவள் கோபம் அவனுக்கு நன்றாகவே தெரியும்...தன் நண்பன் பேசுவதை போல தானே அவளிடத்தில் பேச துவங்கினான்...அவள் அதை நம்பாமல் இருக்க அவளை போராடி நம்பவைத்து....கேள்விகளால் அவளை கோபப்படுத்தினான்..அவன் உங்களை காதலிப்பதாகவும் அதை சொல்ல தயங்குவதாகவும் நண்பனான என்னிடத்தில் இதையெல்லாம் சொல்லி புலம்புவதாகவும் சொன்னான்..அவளுக்கு கோபம் தலைக்கேற..சந்தேகமும் பற்றிக்கொண்டது ஒரு வேளை பேசுவது அவன் தானோ என்று.. *Shiva* எங்கே என கேட்டாள்..அவன் தூங்குவதாகவும் தான் அவன் கைப்பேசியை பயன்படுத்துவதாகவும் சொன்னான்... வந்தது கோபம் அவனுக்கு அவனை பற்றி நன்கு தெரியும் அவளுக்கு அவன் கைப்பேசியை யாருக்கும் தர மாட்டான் என்று நன்கு அறிந்தவள்..பேசுவது அவன் தான் என்று உறுதி செய்தாள்..இவ்வளவு கீழ்தரமான(*cheap*) செயலை அவன் செய்வான் என்று அவள் நினைக்கவே இல்லை...உடனே அவன் நட்பை தூண்டிக்க நினைத்தாள்..இவ்வளவு நேரம் பேசியது நீ தான் என்று நன்றாக தெரியும்...இனிமேலும் உன்னோடு பேச விருப்பமில்லை என்றாள்..இறுதியாக *good bye*....

தன் திட்டம் நிறைவேறியதென்று மகிழ்ச்சி கொள்வதா இல்லை இனிமேல் அவள் தன் வாழ்வில் நினைவுகளில் மட்டும் தான் நிஜத்தில் இல்லை என்று கவலை கொள்வதா தெரியவில்லை... இடையில் வந்தவன் இடையில் போனதாய் அவள் நினைத்து கொள்வாள் இனிமேல் அவள் வாழ்க்கையில் இன்பம் மட்டுமே என்ற நினைப்பு அவன் கவலைகளை மறக்கடித்தது...இருந்தாலும் அவளுக்கு சந்தேகம் வரக்கூடாதென்று விளையாட்டாக செய்ததாகவும் மன்னிப்பையும் கேட்டான்..ஏனெனில் எப்போதும் சண்டையில் அவளை சமாதானப்படுத்துவான் அவன்..அவள் முடிவில் மாற்றமில்லை என்றவுடன்..நிறுத்திக் கொண்டான் பேசுவதை...நீ செய்தது தவறு என்று இதயம் சொல்ல எல்லாம் அவளின் நன்மைக்குதான் இனி அவள் வாழ்வில் இன்பம் தான் என்று மூளை சொல்ல..இந்த ஒரு முறை மூளை சொல்வதை கேட்டுவிட்டான் அவனும்..இரண்டாம் திட்டம் பளித்தது....

எல்லோரின் வாழ்க்கையிலும் முதல் காதல் தோல்வியிலே முடியும் என்று படித்தவை எல்லாம் நிஜமாகி போகும் என்றும்...தானே அவள் தன்னைவிட்டு பிரிய காரணமாய் இருப்பேன் என்றேல்லாம் நினைத்துக்கூட பார்த்தது இல்லை அவன்...எங்கிருந்தோ வந்து அவளை பார்த்து இனி வாழப்போகும் வாழ்க்கை அவளோடுதான் என கற்பனை செய்து வந்ததெல்லாம் நெஞ்சுக்குள் நீங்கா நினைவாகிபோனது.ஆனால் எல்லாம் அவள் நன்மைக்கே என்று நினைக்கையில் எல்லாம் மறந்துபோனது.. தான் நினைத்தது போன்றே அவள் வாழ்வில் ஒவ்வொரு நொடியும் இனிமையாய் வாழப்போகிறாள் என்ற எண்ணம் அவன் செயலை நியாயப்படுத்தின..முதன்முதலாய் தன்னை தெரியாமல் இடித்த நொடி..முதலில் அவளை தேடி..வெள்ளிக்கிழமைகளில் அவளை ஆய்வகத்தில் பார்த்து..பின்தொடர்ந்து..ஒருவழியாக அவளோடு பேசி..நட்பாய் பழகி..சண்டையிட்டு..சோகங்களை பகிர்ந்து..சந்தோஷத்தில் சிரித்த காட்சிகள் எல்லாம் இன்றும் நினைவில் நீங்கா சுவடுகள்..இனிமேல்

